[19th August 1960

THE HON. SRI R. VENKATARAMAN : *(அ)* Rs. 7,500 in 1960–61.

*(ஆ)* This information is not available.

*(இ)* About 2,550 acres on 31st March 1950. It is estimated that the expansion during 1960–61 will be about 500 acres.

(ஈ) Rs. 90,000.

*Bridge on the Polur–Viralur Road*

* 307 *Q.*—SRI S. M. ANNAMALAI : *கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—*

*(அ) வடஆற்காடு மாவட்டம் போளூரிலிருந்து வீரளூர் செல்லும் பாதையில் பாலம் ( bridge ) கட்ட 6—11—1957-ல் பொது மக்களிடமிருந்து மகசர் வந்ததா?*

*(ஆ) அப்படியானல் அதன் மீது எடுக்கப்பட்ட நடவடிக்கை என்ன?*

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (*a*) No, Sir.

*(ஆ)* Does not arise.

SRI S. M. ANNAMALAI : *போளூரிலிருந்து செல்லும் ரோடானது ஜில்லா போர்டு ரோடாக இருக்கும் காரணத்தால் அந்த ரோடில் பஸ் போக்குவரத்து அதிகமாக இருந்தும் கூட பல ஆண்டுகளாக செப்பனிடப்படாமல் இருக்கிறது. ஒரு ஆறு அந்த ரோட்டின் குறுக்கே நான்கு இடங்களில் வருகிற காரணத்தால் நான்கு பாலங்கள் கட்ட சர்க்கார் நடவடிக்கை எடுத்துக் கொள்ளுவார்களா?*

MR. SPEAKER : *ஒரு "ப்ரிட்ஜே" கட்ட முடியாது என்கிற போது நான்கு ப்ரிட்ஜ்கள் எப்படிக் கட்டுவது?*

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : *அங்கு மூன்று பாலங்கள் கட்டுவதற்கு 5,40,000 ரூபாய் தேவைப்படுகிறது. இவைகள் "அப்ரூவ்டு ஸ்கீமில்" இடம் பெருததன் காரணமாக உடனடியாக எடுத்துக் கொள்ளப்படவில்லை.*

*Caste names*

* 308 *Q.*—SRI P. G. MANICKAM : *கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—*

*(அ) எந்த நபரும் அவருடைய பெயரோடுகூட ஜாதியைத் தெரிவிக்கும் வார்த்தை உபயோகிக்கக்கூடாதென்று சட்டம் இயற்றுவதுபற்றி மத்திய சர்க்கார் நம் மாகாண சர்க்காரின் அபிப்பிராயத்தை அறியத் தெரிவித்திருக்கிருர்களா?*

*(ஆ) அவ்வாறு தெரியப்படுத்தியிருப்பின், நம் மாகாண சர்க்கார் மத்திய சர்க்காருக்குத் தெரியப்படுத்தியிருக்கும் ஆலோசனையின் விவரங்கள் யாவை?*